ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# குருவாய் வருவாய்

பெரும்பாலானவர்கள் நோக்கம் பணம், சொத்து, வங்கி இருப்பு என அதிலேயே நாட்டம் இருக்கும். இதிலே, அப்பா கொடுத்து விட்டுப் போன சொத்தாகிய வீடு, கார், தோட்டம், போன்றவைகளில் காலங்கள் போகப் போக வீடு பழுதடையும், அதனை சரி செய்ய வேண்டும், அவ்வாறே, நிலத்திலேயும் வருடா, வருடம் முதல் போட்டு, விதைகள் விதைத்து, உழைத்தே மகசூல் காண முடியும். அப்படியே என்னதான் சிறப்பாக வேலைகள் செய்து தோட்டத்தைப் பராமரித்து வந்தாலும், பூச்சிகள், மழை இல்லாமை, நீர் பற்றாக்குறை போன்ற அனேக காரணங்களினால், விவசாயமும் பெரிய இலாபத்தைக் கொடுப்பதில்லை, அதிகம் செலவுகளைத்தான் வைக்கின்றது.

இதுப்போதாது என்று அரசாங்கம் வேறு பல்வேறு புதிய திட்டங்களை வகுத்து, பண மதிப்பு குறைந்துப் போவது, புதிய வரிகளைப் போட்டு, அதிக பணம் கட்டச் சொல்லிக் கட்டாயப்படுத்துவது, இத்துடன் சமூக அவலங்களான திருட்டு, கொள்ளை போன்ற தொந்தரவுகளால் சொத்துக்கள் பாதிக்கப் படுவது என ஏகப்பட்ட சிரமங்களை, அந்த சொத்துக்களை

வைத்து காப்பாற்றுவதற்குள் போதும், போதும் என்றாகி விடுகின்றது.

இவ்வாறு, எந்தவிதமான சொத்தாக இருந்தாலும், அது நிலையில்லாமல், கொஞ்சம், கொஞ்சமாகக் கரைந்து போக அதிகமான வாய்ப்புகளும் உள்ளது.

இத்துடன், இந்த சொத்துக்களுக்காகக் காத்திருக்கும் வாரிசுகள், உழைக்காமலேயே, சோம்பேறிகளாக மாறி, பல விதமான தவறான காரியங்களில் ஈடுபட்டு, மற்றவர்களுக்குத் தொந்தரவுகள் கொடுத்து, நம்முடைய குடும்ப கௌரவத்தை சீர் குழைப்பதும் சில குடும்பங்களில் நடக்கின்றது.

மேலும், வாரிசுகளுக்கு இடையே சொத்து பிரிப்பதில் முறைகேடுகள் உண்டாகி, அதற்காக, அவர்களுக்குள் சண்டை இட்டுக்கொண்டு, காவல் நிலையம், நீதிமன்றம், வழக்குகள் என ஒரு பக்கம் குடும்பமே அல்லல் படுவதையும் காண முடிகின்றது.

இதுப்போன்ற ஏகப்பட்ட பிரச்சனைகளை பரம்பரை சொத்து, அப்பா சொத்து என்று வைத்திருக்கின்றவர்கள் தினம், தினம் சந்திக்கின்றார்கள். இதில் ஒன்றும் சந்தேகமே தேவை இல்லை. அதைப் பாதிக்கப்பட்டவர்களிடமே நேரடியாகக் கேட்டும் தெரிந்துக் கொள்ளலாம்.

இதில் ஒருசிலர் மட்டுமே தாங்கள் செய்த பூர்வ புண்யத்தின் பலனாக, ஏதோ ஒரு அதிர்ஷ்டத்தில் அப்பா சொத்து நன்றாகவே வளர்ந்து, தப்புகள் ஏதும் நடக்காமலேயே நன்றாக இருந்தால்கூட, கடைசியில் ஒரு நாள் **‘காதறுந்த**

**ஊசியும் வாராதுகாண் கடை வழிக்கே’** என்று அத்தனையையும் விட்டுவிட்டு நாமும் ஒரு நாள் இந்த உலகத்தை விட்டே போக வேண்டியதாக ஆகிவிடுகின்றது.

ஆக, அப்பா கொடுத்த சொத்து சாஸ்வதம் இல்லை. மேலும் அது சத்தியமுமில்லை, அது என்றுமே நம்முடன் இருக்கப் போவதும் இல்லை. ஒன்று அது நம்மை விட்டோ, அல்லது நாம் அதனை விட்டோ நிச்சயம் ஒரு நாள் பிரிய வேண்டிய சூழ்நிலை உண்டாகி விடுகின்றது. இதுப்போன்றே, நாமாக கஷ்டப்பட்டு சம்பாதித்து சேர்த்துக் கொள்கின்ற சொத்தும் இப்படித்தான் ஆகப் போகின்றது.

ஆனால், அதுவே சத்குரு ஒருவர் மட்டும்தான் சாஸ்வதமான சொத்தைக் கொடுக்கின்றார். இந்த சொத்து நாம் உலகத்தை விட்டு போகும் போது கூட வரமுடியாத சொத்து இல்லை. அது நம்மை மீண்டும் இந்த உலகத்திற்கு திரும்பவும் வராமல் செய்கின்ற சொத்து. மேலும், எது சாஸ்வதமான ஒன்றோ, அது அந்தப் பரமாத்வுடன் இருந்து நம்மை பிரிக்க முடியாமல் செய்கின்ற சொத்து எனலாம்.

ஞானம் என்ற நிலையான சொத்தை சத்குரு அநுக்ரஹம் செய்கின்றார். இந்த சொத்து குறைந்துக் கொண்டே போவது கிடையாது, நாம் சிரமப்பட்டு அதைப் பெருக்க வேண்டிய அவசியமும் கிடையாது, கடினமாக உழைத்து, மேலும் பாவங்களை பெரிதாக்கிக் கொள்கின்ற சொத்தும் அது கிடையாது. ஒருமுறை சத்குரு கொடுத்து விட்டால், யாராலும் அதை அபகரித்துச் சென்றுவிட முடியாத சொத்து.

மேலும் மற்ற சராசரி சொத்துக்களினால் கிடைக்கின்ற சுகங்கள் தற்காலிகமானது. ஆனால், சத்குரு கொடுத்த சொத்தோ முழுமையான சுகத்தை நிலையாகக் கொடுப்பது.

இப்படிப்பட்ட மிகப் பெரிய உபகாரத்தை செய்த சத் குருவிடம், '**எவனுக்கு ஈஸ்வரனிடம் உத்தம பக்தி இருக்கின்றதோ, அதைப்போன்றே மாறாத உத்தம பக்தி சத்குருவிடமும் வைக்கப்படுகின்றதோ, அந்த மஹாத்மாவுக்கு மட்டுமே தத்வார்த்தங்கள் எல்லாம் தானாகவே பிரகாசிக்கும்**' என்பதை, ஸ்வேதாஸ்வதர உபநிஷத்து மற்றும் குரு கீதை என இரண்டிலும் கூறப்பட்டுள்ளது.

அந்த ஸ்லோகம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**யஸ்ய தேவே பராபக்திர் - யதா தேவே ததா குரௌ |**
**தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந: ||**

இந்த ஸ்லோகத்திலே **'பிரகாசிக்கும்'** என்பதற்கு படிக்கின்ற பாடங்கள் நன்றாக மூளைக்குப் புரியும் என்று தவறாக நினைத்து விடக்கூடாது. மூளைக்குப் புரியும் படியாக ரஹஸ்ய அர்த்தங்களை குருவே கூறி விடுவார்.

சத்குரு கூறுகின்ற சாஸ்திர உபதேசம் எதற்காக இருக்கின்றது? மூளையின் திருப்திக்காகவா? இல்லையே!

மூளையின் திருப்தி அஹங்காரத்தில் அல்லவா நம்மை கொண்டுபோய் சேர்க்கும்? ஆனால், சாஸ்திர உபதேசமோ

அஹங்காரம் அழிப்பதற்காக மட்டும் அல்லவா உபதேசிக்கப் படுகின்றது?

அதாவது உபதேசத்தின் முக்கிய நோக்கம், கற்றுக் கொண்ட சாஸ்திர விசயங்கள் அனைத்துமே, கற்கின்றவன் ஆத்மாவை கேள்வி ஞானமாக அறிந்துக் கொண்டு, **"நான் அதுவாகவே இருக்கின்றேன்"** என்று மற்றொரு கோணத்தில் கூறிக்கொண்டு, அதே அஹங்காரத்தில் இருப்பதற்காக அல்ல.

ஆத்ம அனுபவங்கள் எப்படி இருக்கும் என்பதை சாதாரண மூளை அளவில் புரிந்துக் கொண்டு நின்று விடாமல், அவனுக்கு நேரடி அனுபவமாக அது இருக்க வேண்டும்.

அதாவாது **'ஸ்வாநுபூதி'** என்பது ஆத்மாவை அறிந்தவர், அதை நேரடி அனுபவமாகத் தன்னில் தானே அறிவதுதான் என்கின்றது சாஸ்திரம்.

மூளைக்கும் ஆதாரமாக ஒரு ஜீவ சைதன்யம் இந்த உடலில் இருக்கிறதல்லவா? அதைத்தான் உயிர் என்று கூறுகின் றோம்.

அந்த உயிரின் அனுபவமாகவே, அவன் அறிந்துக் கொண்ட விஷயம் இருக்கும் போதுதான் **'ஸ்வாநுபூதி'** உண்டாகிறது.

அந்த நேரடி அனுபவம் அவனுள் நடைப்பெறும் போதுதான், ஜீவ சைதன்யம், ப்ரஹ்ம சைதன்யம் என்கிற இருமைகள் முற்றிலும் நீங்கி, அவன் அறிந்துக் கொண்ட **"நான் ஆத்மா"** என்ற கேள்வி ஞானமும், மற்றும் அதை

நேரடியாக அனுபவிப்பவன் என்ற அபிமான பேதமும் போய்விட்ட நிலையில், அவன் அந்த சாஸ்வதமான சத்யமாகவே ஆகிவிடுகிற நிலை உண்டாகின்றது.

அத்வைதிகள் கூறுகின்ற || **கைவல்யம்** || இது தான்.

பரோக்ஷம், அபரோக்ஷம் என்று சமஸ்கிருத மொழியில் இதைப் பற்றிக் கூறப்படுவதுண்டு. இதில் **பரோக்ஷம்** என்பது, நமக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டிருப்பது, அதாவது, ரஹஸ்யமாக இருப்பது. **அபரோக்ஷம்** என்பது, நமக்கு நன்றாகத் தெரிவது. அதாவது வெட்ட வெளிச்சமாக இருப்பது.

கேள்வியறிவு **பரோக்ஷம்**, அனுபவ அறிவு **அபரோக்ஷம்** எனலாம்.

அனுபவத்துக்கு வராதவரையில் ஒன்றைப் பற்றி அறிந்துக் கொண்ட அறிவு அதன் பிரயோஜனமான நேரடி அனுபவத்தை நமக்குக் கொடுக்காமல் இருக்கும்.

உதாரணமாக இனிப்பு என்று கேள்விப்பட்ட அறிவு, அதை சுவைக்காதவரை நமக்கு அனுபவம் ஆகாது.

அதுப்போன்று, ஆத்மா என்று கேள்விப்பட்ட அறிவு, அதை நேரடியாக அனுபவித்து அறியாதவரை, நமக்கு அதனால் எந்த ஒரு பயனும் கிடையாது. மற்ற புத்தகங்கள் வாயிலாக, மற்ற விசயங்களை அறிந்துக் கொண்டதுப் போன்ற வெறும் கேள்வி ஞானம் மட்டும்தான்.

ஆத்மாவைப் பற்றி ஆயிரக்கணக்கான புத்தகங்களின் வாயிலாகப் படித்து அறிந்துக் கொள்ளலாம். அதனால், அது அனுபவமாக ஆகிவிடுமா?

**ஏட்டிலே படித்த சுரைக்காய், சமையலுக்கு உதவுமா?**

எதுவும் நேரடி அனுபவம் ஆகாதவரை, அது வெறும் **பரோக்ஷம்** மட்டுமே. அதாவது, வெறும் படித்த அறிவு மட்டுமே ஆகும்.

அதுவே, அறிந்த அறிவு, அனுபவமாகும் போது மட்டுமே நமக்கு அது அபரோக்ஷம் ஆகின்றது. அதாவது, நேரடி அனுபவமாக நம்மிடையே அனுபவிக்கப்படுகின்றது.

இதிலே கொஞ்சம் வேடிக்கை என்னவென்றால், குரு உபதேசம் மூளை அளவில் மட்டும் ஏறுகின்றபோது நமக்கு அது ரஹஸ்யமாக இருப்பது போன்று தோன்றுவதில்லை. மூளைக்கு நன்றாக விஷயம் தெரியத்தான் செய்கின்றது.

ஆனாலும், அது உயிரின் அனுபவமாக இல்லாததால், அதை **பரோக்ஷ ஞானம்** என்றே அறிய வேண்டும். எப்பொழுது, அது உயிருக்கு உள்ளேயே போய் அனுபவமாக மாறுகின்றதோ, அப்போதுதான் அதற்கு **அபரோக்ஷ அநுபூதி** என்ற பெயர் கொடுக்கப்படுகின்றது.

அதாவது, இதிலேதான் சூக்ஷூமம் ஒளிந்துக் கொண்டு இருக்கின்றது. சத்குருவின் வார்த்தைகளைக் கேட்ட மாத்திர த்திலே, மூளைக்கு அது நன்கு எட்டி விடுகின்றது, புத்திக்கும் நன்றாக உரைக்கின்றது.

அதாவது, **“நான் ஆத்மா”** என்பதை புத்தி ஏற்றுக் கொண்டாலும் **பரோஷ ஞானமாகவே** இருக்கின்ற அது, நேரடி அனுபவமாக மாறாதவரை ரஹஸ்யமாகவே இருக்கின்றது.

அதுவே, மூளைக்குள் ஏற்றிவைக்கப்பட்ட அனைத்து அறிவுகளையும் இறக்கி வைத்து விட்டு, எண்ணங்கள் ஏதுமற்ற நிலையில் ஏகாந்தமாக இருக்கின்ற பொழுதுதான், உயிரில் கலந்த உணர்வாக அது வெளிப்பட்டு, புலன்களும், புத்தியும் செயல்படாத நிலையில், அது **அபரோக்ஷ அனுபவமாக** ஆகின்றது.

இந்த முரண்பாடுகளைத்தான் வேடிக்கையாக காணப் படுகின்றது என்று இங்கு கூறப்படுகின்றது.

இந்த ஆன்மாவின் நேரடி அனுபவம் நம்மிடையே நடைப்பெற வேண்டுமானால், அதை எவ்வாறு அறிவது?

பால் ருசியாக இருக்கின்ற ஒரு வஸ்து என்று நமக்கு நன்றாகத் தெரியும்.

அவ்வாறே சர்க்கரையும் மிகவும் ருசியான ஒரு வஸ்து என்று நமக்கு நன்றாகத் தெரியும். அதனால், பாலையும் சர்க்கரையையும் ஒன்றாக்கி, பாலைச் சுண்டக் காய்ச்சினால், அருமையான பால்கோவா உண்டாகின்றது அல்லவா?

அதாவது, அந்த இரண்டையும் ஒன்றாக்கி ஒரு உண்ணும் பண்டம் செய்யப்படும் பொழுது, அது மிகவும் ருஷியானது என்பது மூளைக்கு நன்றாகத் தெரிகின்றது.

இப்படி மூளையால் நிச்சயப்படுத்தித் தெரிந்து கொண்டு விட்டாலும், அந்த பால்கோவா பதார்த்தத்தை சுவைக்காமல் அதன் சுவை அனுபவம் ஆகாதே.

எனவே அதன் சுவை நமக்கு அனுபவம் ஆக வேண்டும் என்றால் அதைத் தின்றுப் பார்க்க வேண்டும்.

அதாவது, மூளைக்குத் தெரிகின்ற அதன் ருஷி, நம் அனுபவத்திற்கு வர வேண்டி அதை நம் உள்ளே தள்ளுகின்ற பொழுதுதான், அதைப்பற்றிய சரியான, நிஜமான அனுபவம் நமக்கு நேரடியாக உண்டாகின்றது.

அதாவது, அறிவுக்கு வெளியே வெளிப்படையாகத் தெரிந்த அந்த பால்கோவா இருந்த இடம் தெரியாமல், இந்த உடலுக்குள் மறைந்து போனப் பிறகுத்தான் அதன் அனுபவம் நமக்கு நேரடியாக உண்டானது. அதாவது, ஸ்தூலமான பால்கோவா தன் ரூபத்தை இழந்து, சூக்ஷுமமாக மாறிய உடனே, அதன் உண்மையான பலன் நமக்கு வெளிப்பட்டது.

அதாவது **'உள்' 'வெளி'** என்பதில் இரண்டு விதம் இருப்பதாகத் தெரிகிறது.

ரூபத்தினால் வெளிப்படையாக ஒன்று இருக்கின்றபோது அதனுடைய சாரமான சுவையின் முழுப்பயன் பிரகாசிக்காமல் இருக்கிறது.

பிரகாசிக்காமலிருக்கிறது என்றால் ரஹஸ்யமாக ஒளிந்து கொண்டிருக்கிறது என்றுதான் அர்த்தம்.

அதாவது வேதாந்த பரிபாஷைப்படி அது '**பரோக்ஷ**' மாகத்தானிருக்கிறது.

உள்ளே போய் அதன் ரூபம் மறைந்து விடுகின்றபோது அதன் சாரமான **சுவை** என்ற பலன் பிரகாசித்து '**அபரோக்ஷ**' மாக மாறுகின்றது.

ஒரு வஸ்து ஸ்தூலத்தில் தெரிந்துக் கொண்டிருந்தாலும் அதனால் கிடைக்கக் கூடிய சாரமான பலன் கிடைக்கவில்லை என்றால் அது இருந்தாலும் இல்லாதது போன்றதுதான்.

அது ஸ்தூலமாகத் தெரியாவிட்டாலும், சூக்ஷுமத்தில் அதன் பலன் நன்றாக வெளிப்பட்டுத் தெரிகின்றது என்றால், அது இல்லாத போதும், இருக்கின்றதாகத்தான் அர்த்தம்.

அதாவது, அந்த வஸ்துவின் வெளி வேஷத்தைவிட அதன் உள் சாரமமான சுவைதான் மிகவும் முக்கியம் என்பதை ஒப்புக் கொண்டோமானால், அந்த சுவை வெளியாகாத நிலையே **பரோக்ஷம்**, சுவை வெளியாகிப் பயன் தரும் போதே **அபரோக்ஷம்** என்று அறியப்படுகின்றது.

அப்படிப்பார்க்கின்ற பொழுது, வெறும் மூளை அளவில், நான் ஆன்மா என்ற உபதேசம் நிற்கின்ற போது, அது பரோக்ஷம்தான், உபதேசமும் போய், மூளையும் போய் தன்னையே மறந்த சமாதி நிலையில், உபதேச சாரம் வெளிப் பட்டு, உயிரில் உறைவதுதான் அபரோக்ஷம் என்று ஆகின்றது.

மூளைக்குத் தெரிவது வேறு, அதற்கும் ஆதாரமான உயிருக்கு தெரிவது வேறு.

மூளைக்கு அதைப்பற்றிய அறிவு இருந்து அனுபவம் இல்லை. உயிருக்கு உள்ளுணர்வு அனுபவமாக இருக்கின்றது, அதனால் அதுக்கு புற அறிவு அவசியமே இல்லை.

நம்முடைய உள்ளுணர்வு அனுபவமாக வேண்டிய சாஸ்திரத்தின் மஹா வாக்கிய உபதேசங்கள்கூட, நம்முடைய மூளை சரியாக இருக்குமா? என்று எடைப் போட்டுப் பார்க்கக்கூடிய பரிதாபகரமான நிலையில் நாம் இருக்கின்றோம்.

அதுப்போன்றே, சாஸ்திரத்தை உபதேசிக்க வருகின்ற சத்குருவையும், இதே மூளை ஆராய்ந்து பார்க்கின்றது. இவருக்கு இதைக் கூற தகுதி இருக்கின்றதா? இவரை எந்த அளவிற்கு நம்பலாம்? என்று மூளை முடிவு செய்ய வேண்டிய அவசியத்தில் இருக்கின்ற பொழுது, எங்கிருந்து சாஸ்திரம் கூற வருகின்ற உபதேசத்தின் உன்னத இலக்ஷியம் ஆகிய || **கைவல்யம்** || என்ற பலன் கிடைக்கப் போகின்றது?

உதாரணமாக, ஆத்மா சச்சிதாநந்த ஸ்வரூபமாகத்தான் இருக்க வேண்டுமென்று இத்தனை வேதாந்த புஸ்தகங்களைப் படித்து, குரு உபதேசங்கள் கேட்டு புத்தியினால் புரிந்துக் கொண்ட போதிலும், நமக்கு சத்தும் தெரியவில்லை, சித்தும் தெரியவில்லை, ஆனந்தமும் தெரியவில்லை.

இன்னும் துக்கப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றோம். அதனால், விஷயம் புத்திக்குள் போனதோடு நிறுத்திக் கொள்ளாமல், அதை ஹ்ருதயத்துக்குள் இறக்கிக் கொள்ள

வேண்டும் என்பதையே இங்கு வெளிப்படையாகக் கூற வருகின்றோம்.

மூளை மேலும், மேலும் இதுப் போன்ற சாஸ்திர விசயங்களின் அபிமானத்தினால், அதிகம் அலைச்சல் பட்டு, அடைய வேண்டிய சாரமான || கைவல்யம் || என்ற பலன் அடைய முடியாமல் களைத்துப் போன பிறகுதான், ஹ்ருதயத்தைத் திறந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம் உண்டாகின்றது.

புத்தியினாலே அனேக வாதங்கள் புரிந்து, இந்த உலகமே இன்றைக்கு பிரமிக்கும் படியாக சித்தாந்தம் கொடுத்த ஜகத் குரு பகவான் ஸ்ரீஆதிசங்கரர் கூட 'ஸ்ருதி (வேதம்) கூறுகின்ற விஷயங்களை மூளையால் ஆராய்ச்சி செய்யவே கூடாது என்றும், நம் மூளைக்கு அதீதமானதை பரமாத்மாவே ரிஷிகளுக்கு தங்களது உள்ளுணர்வில் ஸ்புரிக்கச் செய்து, இந்த உலகத்தின் உயிர்களின் நன்மையின் பொருட்டு, கருணை யினால், வேதங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ஆகவே, 'ஸ்ருதி வாக்யத்தை எந்த கேள்வியும் கேட்காமல், அப்படியே ஏற்றுக்கொள்' என்றுதான் கூறுகின்றார்.

எந்த ஒரு சித்தாந்தம் என்றாலும், அது ஸ்ருதி, யுக்தி, அனுபவம் என்ற மூன்றுக்கும் பொருந்துவதாகவும், மூன்றுக்கும் ஏற்புடையதாகவும் இருக்க வேண்டுமென்ற கருத்தையே எல்லா ஆசார்யர்களும் பின்பற்றியிருக்கிறார்கள்.

ஸ்ருதி கூறுகின்ற விஷயங்களை அப்படியே ஏற்க வேண்டும். அதற்கு விரோதம் இல்லாமலும், அதன்

முடிவுகளுக்கே கொண்டு விடுவதாகவும், அல்லது அதில் குறிப்பு மட்டும் காட்டியிருப்பதை நன்றாக விளக்கியும், அதில் கூறாமல் விட்ட விஷயங்களை நன்றாக ஆராய்ச்சி செய்தும், அதற்காக புத்தியைக் கொண்டு வாதம் செய்வதுதான் 'யுக்தி' என்றும், முடிவிலே ஸ்ருதியும், யுக்தியும் அனுபவத்தில் கொண்டு வந்து விட்டால்தான் முழுமையான பலன் என்றும், அந்த அனுபவம் ஹ்ருதயம் என்பதான உயிருக்குள்ளேயே உண்டாகவேண்டும் என்பதே இங்கு சத்குரு உபதேசிக்கின்ற விஷயம்.

ஆகவே, அனுபவம்தான் மிக முக்கியம். உபதேசம் மூளையோடு நிற்காமல் அனுபவமாகப் பழுக்க வேண்டு மானால், அதற்கு ஈஸ்வர பக்தியும், அதற்குக் கொஞ்சங்கூடக் குறைவில்லாத குரு பக்தியும் இருந்தால்தான் முடியும்.

அதுதான் ஹ்ருதயம் என்கின்ற நிலத்தைக் கிளறிவிட்டு, சாஸ்திரம் என்ற விதை விதைத்து, இறுதியில் அனுபவம் என்ற விளைச்சலை பலனாக அடைவதாகும்.

மூளை ஆணவத்தினால், **"நான்"** என்று தன்னையே நிலை நாட்டிக்கொள்ளாமல், உண்மை **"நான்"** எது? என்று அறிவதற்கு **அன்பு** அவசியம் வேண்டும். அந்த அன்பும் ஈஸ்வரன் மீது, எந்தவித எதிர்ப்பார்ப்பும் இன்றி, முழுமையாக வைக்கப்பட வேண்டும். அவ்வாறே, அதற்குச் சமமான குருபக்தியும் வேண்டும் என்று அந்த ஸ்லோகம் கூறுகின்றது.

இதையே, இன்னும் சற்று ஆழமாக ஆராய்ந்துப் பார்த்தோமானால், அதென்ன இரண்டு பக்திகள்?

**ஈஸ்வர பக்தி** என்று ஒன்று, **குரு பக்தி** என்ற மற்றொன்று?

அதுவும், இரண்டையும் சரிசமமாக ஏன் பக்தி செய்ய வேண்டும்? மேலும், ஈஸ்வரனை மட்டும் பக்தி செய்தால் போதாதா? என்ற சந்தேகம் உண்டாகுமாயின், அதற்கான விளக்கத்தை விரிவாக இங்கு காணலாம்.

ஈஸ்வரன்தானே தன்னை நமக்குக் காட்டிக் கொடுப் பதற்காக குருவாக வந்திருக்கிறான்? அப்படித் தானே எல்லா சாஸ்த்திரங்களும் கூறியிருக்கின்றன? அத்தனை மஹான்களும் அதைதானே எழுதி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள்?

அதுவும், அவரவர்களுக்குப் பிடித்த, தங்கள் இஷ்ட தெய்வத்தையே சத்குரு வடிவில் வந்து அருள் செய்வதாகக் கூறுகின்றார்கள்.

விநாயகர் அகவலில் அவ்வையார் விக்னேஸ்வரரே குருவாக வந்தார் என்கிறாள்.

கந்தரநுபூதியில் அருணகிரிநாதர் '**குருவாய் வருவாய்**' என்று முருகனை வேண்டிக் கொண்டு, அந்த முருகப் பெருமான் குருவாய் வந்து, எல்லாக் கார்யத்தையும் விட்டு விட்டு மௌனமாக ஆத்மாவுக்குள்ளே முழுகிப் போய்விடு, '**சும்மா இரு சொல் அற**' என்று கூறியதாகச் சொல்கின்றார். இப்படி ஒரு உபதேசத்தைப் பண்ணி, அந்த உபதேசம் உள் அனுபவமாகவும் ஆகுமாறு முருகன் செய்தாரென்பது, அவன் சத்குரு ஸ்வரூபமாக மனித வடிவில் வந்து அருளினான் என்பதையே காட்டுகின்றது.

இவ்வாறே, மாணிக்கவாசகரும் திருப்பெருந்துறையில் ஆவுடையார் கோவில் என்கின்ற அந்த ஸ்தலத்தில், குருந்த மரத்தடியில் குரு ஸ்வரூபமாக வந்து பரமேஸ்வரன் தம்மை ஆட்கொண்டு விட்ட பரம கருணையைப் பல இடங்களில் உருகி, உருகி கூறியிருக்கின்றார்.

இவ்வாறு, இத்தனை மஹான்களும் தங்கள் கண்ணுக்குத் தெரிகின்ற சத்குருவையே தங்கள் இஷ்ட தெய்வமாகப் பார்த்தனரே அன்றி, அவர்கள் கண்ணிற்குத் தெரியாத அந்த ஈஸ்வரனைப் பற்றி இங்கு கூற வரவில்லை.

ஆனால், நாம் நம் சத்குருவை நம்பாமல், அந்த ஈஸ்வரனை மட்டுமே உபாசித்துக் கொண்டு, அவன் வருவான் என்று எத்தனைக் காலங்கள் காத்திருந்தாலும், அவன் எப்பொழுது நேரில் வந்தாலும் ஸ்தூலத்தில் மனித தேகத்தில் சத்குரு உருவத்தில் மட்டுமே வந்து உபதேசிக்க முடியும்.

ஆக, சத்குருவை அன்பு (பக்தி) செய்தால், அந்த ஈஸ்வரனை பக்தி செய்ததற்குச் சமம் என்பதை எடுத்துக் கூறவே இந்த ஸ்லோகம் இவ்வாறு விளக்குகின்றது.

ஆகவே, ஈஸ்வரனேதான் சத்குருவாக வந்திருக்கிறான் என்பது மட்டுமே உண்மை. இதைப் புரிந்து கொண்டு விட்டால் அதற்குப் பிறகு, ஈஸ்வரனிடமும் பக்தி, அதே அளவுக்கு சத்குருவிடமும் பக்தி என்று இரண்டு பக்திகளைக் கூற வேண்டிய அவசியம் இல்லை. குருவே ஈஸ்வரன் என்று அந்த ஒருவரிடமே பூர்ணமாக மனதைக் கொடுத்து ஒரே பக்தியாகப் செய்ய வேண்டுமென்று ஆகிவிடும்.

இப்படி குரு ரூபத்தில் மனித சரீரத்தில் வந்திருக்கின்ற ஈஸ்வரனிடத்தில், வைக்கின்ற உயர்ந்த பக்தியை, **“பராபக்தி”** என்று அழைக்கின்றோம்.

அந்த உத்தமான பக்தியைச் செலுத்தி விட்டாலே, உபதேசத்தின் உட்பொருளெல்லாம் உள் அனுபவமாகப் புரிந்து அனுபூதியாகிவிடும்.

பக்தி செலுத்துவதால் முக்தி கிடைத்து விடுமென்று கூறினால், நாம் செலுத்தும் அந்த பக்தியே நேராக முக்தியைக் கொடுத்து விடுகின்றது என்று பொருள் இல்லை.

நாம் செய்கின்ற எதுவுமே தானாக எந்தப் பலனையும் தருவதில்லை. பலன்களைத் தருகிற கர்மபலதாதாவாக ஈஸ்வரனே இருக்கிறான்.

அவன்தான் பாவ, புண்ணியம் பார்த்து, எல்லாருக்கும் எல்லாப் பலனையும் கொடுக்கிறான். அவ்விதத்தில் நாம் செய்கின்ற பக்திக்குப் பலனாக அவன் பரம க்ருபை செய்து, ஞானத்தைத் தந்து, அந்த ஞானத்துக்குப் பலனாக கைவல்ய அனுபூதியைக் கொடுக்கிறான்.

ஆக, பலன் தருவது நாம் செய்யும் பக்தியால் அல்ல. அதற்குப் பிரதியாக ஈஸ்வரன் செய்யும் கிருபைதான் பலனைத் தருவது.

ஒருவன் செய்கின்ற பக்தி உண்மையானதாக இருந்தால், அந்த பக்தியை செய்கின்றவன், அதற்கானப் பலனை நிச்சயம் எதிர்ப் பார்த்து செய்ய மாட்டான்.

அப்படி, ப்ரதிபலன் எதிர்பார்த்து பக்தி செய்து விட்டால், அது வியாபாரம் போன்று ஆகிவிடுமே தவிர, பக்தி என்று கூற முடியாது என்பதையே பாகவதமும் பறைச் சாற்றுகின்றது.

உண்மையிலேயே எந்த பலனையும் விரும்பாமல் பக்தி செய்யும் பக்தன் இருந்தால், இவனது உண்மையான பக்திக்கு பலன் கொடுக்காமல அந்த ஈஸ்வரனால் இருக்க முடியுமா?

காரணம், அவன்தான் கர்மபலதாதா ஆயிற்றே, அதனால் அவன் க்ருபை செய்தே தீருவான்.

ஞானத்தை நிச்சயம் அனுக்ரஹிக்கத்தான் செய்வான். பக்தனை சம்ஸாரத்திலிருந்து விடுவித்து கைவல்யத்தில் கலக்கச் செய்வான்.

குருவே ஈஸ்வரன், ஈஸ்வரனே குரு என்கின்றபோது, குரு **க்ருபை** என்ற ரூபத்தில், இத்தகைய மிகப்பெரிய உபகாரத்தை, அதாவது கைவல்யப் பலனை ஈஸ்வரன் கொடுத்து விடுகின்றான் என்பதை அறிய முடிகின்றது.

அதாவது, ஈஸ்வரன் என்ற ஒருத்தனுடைய ஒரே க்ருபைதான், குருவின் மூலமாக **குரு க்ருபை** என்பதாக வருகின்றது. இவ்வாறு, குரு பரம க்ருபை செய்கின்ற போது, ப்ரத்யக்ஷமான அனுபூதி பிறக்கும்.

அந்தப் பலன் என்பது, மூளை அளவோடு நின்று விடாமல், அந்தராத்மாவுக்குள்ளே புகுந்து அனுபவமாக

வேண்டுமானால், நாம் பரிபூர்ணமான பக்தியை அந்த குருவிடம் செலுத்த வேண்டும் என்பதுவும் தெரிகின்றது.

அவ்வாறே, எல்லா தேவர்களுக்குச் செய்யும் நமஸ்காரமும் ஒரே ஈஸ்வரனைத்தான் சென்று சேருகின்றது என்று சாஸ்த்திரம் கூறுகின்றது:

**ஸர்வ தேவ நமஸ்கார: கேசவம் ப்ரதிகச்சதி**

ஒரே பரமாத்மாதான் பல தெய்வங்களாக இருக்கின்றது. அவ்வாறே, மனிதர்களாகவும், இந்த மொத்த பிரபஞ்சமும் அதுவே இருக்கின்றது. ஆகையால், எந்த தெய்வத்திற்கு செய்கின்ற நமஸ்காரமும் இத்துடன், '**எந்த மனிதனுக்குச் செய்கின்ற நமஸ்காரமும்**' அந்த ஏக பரமாத்மாவைத்தான் சென்றடைகிறது என்பதை சாஸ்திரமும் சுட்டிக் காட்டுகின்றது.

அந்த வகையிலே நமஸ்காரம் என்றால் என்ன?

ஒருவருக்கு ஒருவர் கையெடுத்துக் கும்பிட்டுக் கொண்டு இருப்பதையா கூறப்படுகின்றது? இங்கே காரியம் என்பது இரண்டாம் பக்ஷம். பாவம்தான் முக்கியம்.

பக்தி பாவத்தைப் பல விதமாகத் தெரிவிக்க வேண்டியும், பகவானுக்கு முன்னால் தான் ஒன்றுமே இல்லை என்று மிக எளிமையோடு இருப்பதையும் எடுத்துக் காட்டவே நமஸ்காரம் என்ற க்ரியை.

ஆக, நமஸ்காரம் என்று க்ரியையைச் செய்தாலும், அது பக்தி என்ற உணர்ச்சியைக் குறிப்பது தான். எனவே, எவருக்குச் செய்கிற நமஸ்காரமும், ஒரே பரம்பொருளான

பகவானுக்குப் போய்ச் சேரும் என்று கூறினால், மனிதர்களிடம் செலுத்தும் பக்தியும், நமஸ்காரமும் அந்த பரமாத்மா என்ற ஒருவனுக்கே அர்ப்பணமாகும் என்றே பொருள்.

அவ்வாறு, எல்லா நமஸ்காரமும் ஒரு பரமாத்மா வுக்குத்தான் போகின்றது என்றால், அதற்குப் பதிலாக நமஸ்கரிக்கப்படுபவர் எவர்களானாலும், அவர்கள் செய்கின்ற ஆசீர்வாதங்கள் எல்லாமும், அந்த ஈஸ்வரன் ஒருவன் இடமிருந்தே வருகின்றது என்பதுவும் உண்மை.

அந்த வகையிலேதான் பெரியவர்கள், சிறியவர்களை ஆசிர்வதிக்கின்ற சம்பிரதாயமும் நம் சனாதன தர்மத்தில் உள்ளது.

அதே சமயம் விபரம் அறிந்த பெரியவர்கள் ஒரு மரியாதை நிமித்தம் மற்றவரை ஆசிர்வாதம் செய்ய உத்தேசித்து, ஆசீர்வாதம் செய்தாலும், தங்களுக்குச் செய்யப்பட்ட நமஸ்காரத்தை உண்மையிலேயே ஈஸ்வரனுக்கே அர்ப்பணம் செய்து விடுகின்றார்கள்.

அவ்வாறே, சிஷ்யன், பக்தன் போன்றவர்களின் மனதில் ஒரு நல்ல பணிவான எண்ணமாகப் புகுந்து அவர்களை நமஸ்காரம் செய்ய வைக்கின்றவனும், பெரியோர்கள், மஹான்கள் வாயிலாக ஆசிர்வதிக்கின்றவனும்கூட, அந்த ஈஸ்வரன்தான்!

அதாவது எல்லா பக்திகளுக்குமாக, அறியாத நிலையில் **குரு பக்தி, ஈச்வர பக்தி** என்று நாம் பிரித்துப் பிரித்துப் பலபேரிடம் செலுத்துகின்ற, எல்லா பக்திகளுக்கும் பதிலாக,

அப்படிப் பல ரூபத்திலிருக்கிறவர்கள் செய்கிற க்ருபைகளும் அவன் ஒருவனே செய்வதுதான்.

குருவுக்கு சொந்தமாக க்ருபா சக்தி என்று ஒன்று எப்படி உண்டாகமுடியும்? சகல சக்திகளும் அந்த ஈஸ்வரன் ஒருவனைச் சேர்ந்தவைதானே? அவனோடு சேர்ந்திருந்து அவனிடமிருந்துதானே குருவும் சக்தி பெறுகிறார்? குரு என்கிறவர் இந்த குரு என்ற ஸ்தானத்துக்கு உயர்ந்ததும் ஈஸ்வர க்ருபையால்தான்.

குருவான பிறகு ஈஸ்வரனுடைய க்ருபையை நம்பி, அதைத்தான் பற்றிக்கொண்டு அவரும் இருக்கிறார்.

ஆகவே, அவருடைய க்ருபா சக்தி என்று தனியாக ஒன்று இல்லை. அதுவும் ஈஸ்வர சக்திதான். திருவருள், குருவருள் என்று இரண்டு சொல்வதில் குருவருள் என்பதும் திருவருளே இவர் மூலமாக வருவதுதான் என்பதையும் அறிவோமாக.

ஈஸ்வரனையே குருவாக, அல்லது குருவையே ஈஸ்வரனாகக் கொண்டு, ஒருவரிடம் ஒரே பக்தியை மற்றொருவருக்கு மிச்சம் மீதி வைக்காமல் '**அநன்யம்**' என்பதாக, அனைத்து பக்தியையும் ஒருவரிடமே முழுமையாக வைத்து விட்டால் போதும். அதுவே ஞான ப்ரகாசத்தைத் தந்து, கைவல்யத்தில் கொண்டு சேர்த்துவிடும் என்றும் புரிகின்றது.

இப்போது ஒரே ரூபத்தில் முழு பக்தியையும் செலுத்தி விட்டாலே போதும் என்கிறபோது, 'ஈஸ்வரன்தானே குரு?

அதனால் ஈஸ்வரனிடமே அநன்ய பக்தி செய்து விடுவோம்' என்று இருக்கலாமா? அல்லது 'குரு என்பவர் ஸாக்ஷாத் ஈஸ்வரன் தானே? **குருஸ் - ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம** என்கிறோமே? அதனால், குருவிடமே பூர்ண பக்தியும் செலுத்தி விடுவோம்' என்று இருக்கலாமா?

இதுப்போன்ற சந்தேகங்கள் மனிதனிடம் எழுவதே, அவனது, இருமைகளான மனதின் வெளிப்பாடு என்பதை அறிந்துக் கொள்ள வேண்டித்தான், சாஸ்திரம் இத்தனை உபதேசங்களையும் அவனுக்கு கொடுத்து, அவனை அத்வைத நிலையை நோக்கி, செலுத்த முயற்சிக்கின்றது.

ஆனால், இந்த பாமர மனிதனோ, அதுப் புரியாமல், எதையாவது, மாற்றி, மாற்றி பிடித்துக் கொண்டிருந்தால்தான் அவனுக்கு அதில் சந்தோசம் இருப்பதாக நினைத்துக் கொண்டு, அந்த மாயையின் பிடியில் மயங்கியவனாகவே இன்னும் இருக்கின்றான்.

இவனது, பாவ கர்மாக்கள் குறைந்து, புண்ணிய கர்மாக்கள் செயல்படும் பொழுது, அவனுக்கு சாக்ஷாத் அந்த ஈஸ்வரன் குருவாக மனித உருவில் மட்டுமே வருகின்றான். அவனை ஆட்கொண்டு அருள்கின்றான். அதன் பிறகுதான் அவனுக்கு ஒன்றேயான ஏகாக்கிர பக்தியாகிய மிக உயர்ந்த பக்தியாகிய **"அநன்ய பக்தி"** உண்டாகின்றது.

**ஓம் தத் சத்!**



# குருவாய் வருவாய்

'எவனுக்கு ஈஸ்வரனிடம் உத்தமபக்தி இருக்கின்றதோ, அதைப்போன்றே மாறாத உத்தமபக்தி குருவிடமும் வைக்கப்படுகின்றதோ, அந்த மஹாத்மாவுக்கு மட்டுமே தத்வார்த்தங்கள் எல்லாம் தானாகவே பிரகாசிக்கும்'